[29th March 1961

அதோடு கூட Degree of Master of Indigenous Medicine, Faculty in Indigenous Medicine and Fellow of the College of Indigenous Medicine என்று இதெல்லாம் இருக்கிறது.

SRI A. VEDARATHNAM : இந்த ரிப்போர்ட்டின் பேரில் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது என்பதை அறிவிக்க முடியுமா ?

The HON SRI M. A. MANICKAVELU : பிப்ரவரி மாதம் 21-ம் தேதி நாட்டுமுறை வைத்தியத்தில் ஈடுபட்டவர்களைக் கூப்பிட்டு ஒரு ஆலோசனை செய்தோம். அதிலே பெரும்பாலோர் "ஆல்மொஸ்ட் ஆல்" நாட்டுமுறை வைத்தியம் இருக்கவேண்டும், அதோடு அலபதி முறையும் சொல்லிக் கொடுக்கப்படவேண்டும் என்று சொன்னார்கள். அந்தமாதிரி கொஞ்சம் வைத்தாலே எல்லோருக்கும் அதிலே புத்தி போய்விடுகிறது. ஆகவே இதுபற்றி என்ன பண்ணலாம் என்றுதான் யோசித்துக்கொண்டிருக்கிறது. இதுபற்றி கனம் அங்கத்தினரும் யோசனை ஏதாவது கூறினால் பரிசீலிக்கப்படும்.

### *Dysentery and typhoid (City)*

*1171 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state the steps taken to prevent the spread of dysentery and typhoid in the City?

THE HON. SRI M. A. MANICKAVELU : No reports of abnormal cases due to dysentery have been received. As regards typhoid, the incidence of the disease which was prevailed in the year 1960 in a mild form showed a sharp increase in the last two months of the year and then declined. The Corporation is undertaking extra-chlorination of water, anti-fly measures, T.A.B. vaccinations and control of food supplies to prevent the spread of the disease.

SRI N. K. PALANISAMI : May I know why the incidence of this disease is increasing every year?

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I cannot agree that it is increasing every year. This year, especially after the heavy rains, there was a tendency for the incidence of the disease to go up. But, as I said, it is declining. The Corporation of Madras have taken necessary steps for the prevention of this disease.

SRI N. R. THIAGARAJAN : சென்னை நகரில் பால் என்று கூறி ஏதோ ஒரு பவுடரை நீரில் கரைத்து வெள்ளையாகக் கொடுக்கிறார்கள். அதைச் சாப்பிட்டதன் பலனாக எனக்குக் கஷ்டம் ஏற்பட்டது. கனம் அங்கத்தினர் ஸ்ரீ பாண்டியராஜ் அவர்கள் அதைச் சாப்பிட்டதன் பலனாக உடல் நோவும், வயிற்றுக் கோளாறும் கண்டு ஊருக்குப் போய்விட்டார். எனவே இந்தப் பாலினால்தான் நோய் வருகிறதா ? பவுடரில் ஏதாவது கோளாறு இருக்கிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : பவுடரில் கோளாறு இருக்கிறதா அல்லது அதைக் கரைப்பதற்காக விடுகிற நீரில் கோளாறு இருக்கிறதா என்று தெரியவில்லை. உடனே அவ்விஷயத்தை கனம் அங்கத்தினர் சுகாதார அதிகாரியின் கவனத்திற்குக் கொண்டுவந்திருந்தால் பரீட்சித்திருக்கலாம். இப்போது கூட வேறு யாராவது அந்தமாதிரி சாப்பிட்டு உடல் நலம் பாதிக்கப்பட்டது என்றால் பரீட்சிக்கத் தயார்.